உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சித்தாந்தம்

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு "



| மலர் ரு | ஆங்கீரச ஆண்டு சித்திரைத் திங்கள் 1932ஆம் ஏப்ரல் மீ | இதழ் ச |
|---|---|---|



## திருப்பருப்பதம்

[பத்திராசிரியர்]

[குறிப்பு :—திருமயிலை வாசியும் நாடோறும் தவறாமல் காலையிலும் மாலையிலும் திருக்கோயில் வழிபாடு செய்பவரும் எமது நண்பருமாகிய திரு. சங்காமுதலியார் சென்ற சிவாரத்திரி யன்று திருப்பருப்பதத்தில் சிவ வழிபாடு செய்தனர். அவரது அநுபவத்தை ஆதாரமாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப் பெற்றது.]

திருப்பருப்பதம் என்பது தேவாரப்பாடல் பெற்ற வடநாட்டுத் தலங்களில் ஒன்று. தெலுங்கு தேசமெனவழங்கும் த்ரிலிங்கதேசத்தில் ஒரு லிங்கம் இங்கே உளது. வடமொழியில் இந்த தலத்தை ஸ்ரீசைலம் என்பர். இதற்குச் செல்லும் வழி மிகவும் கடுமையானது, பெரும்பாலும் அடர்ந்த காட்டில், கடுவாய் முதலிய காட்டு மிருகங்கள் உலவும் இடத்தில் உள்ளது. சாதாரண நாட்களில் மக்கள் செல்வது கூடாதாகும். சிவாரத்திரியை யொட்டி இருபது நாட்கள் பெருந்திரளான மக்கள் ஆயிரக்கணக்காகச் செல்வதால் யாத்திரைசெய்ய விரும்புவோர் அக்காலத்தில் செல்வது தான் நலமாயிருக்கும்.

முதன் முதலாக, மதராஸ் பம்பாய் இருப்புப்பாதையிலுள்ள குண்டக்கல் ஜங்ஷன் சென்று அங்கிருந்து ரயில்மாறி நந்தியால் என்ற ஸ்டேஷனுக்குச் செல்ல வேண்டும். பிறகு நந்தியாலிலிருந்து ஏறக்குறைய 34 மைல் தூரத்திலுள்ள ஆத்மகூர் என்ற இடத்திற்கு மோட்டார் பஸ் மூலம் செல்ல வேண்டும். ஆத்மகூர் பெரியதொரு ஊராகையால் உணவு, தங்குமிடம் முதலிய வசதிகள் ஆங்கு நிரம்பவுண்டு. ஆத்மகூரிலிருந்து மோட்டார்

டாக்ஸி மூலம் 28 மைல் சென்றால் பெத்த செருவு (=பெரிய ஏரி) என்ற இடத்தை யடையலாம். இந்த இடத்தில் சமையல் செய்து சாப்பிடுவதற்கு மட்டும் ஒரு சத்திரம் இருக்கிறது. இந்த சத்திரத்தைத் தவிர வேறு ஊராவது வீடு வாசலாவது இங்கே கிடையாது.

பெத்த செருவிலிருந்து பீமகுண்டா என்ற இடம் எட்டு மைல் தூரத்திலுள்ளது. அவ்விடத்திலும் ஒருவித வசதியுமில்லை. மரத்தடியில் சுனை நீரைக் கொண்டு உணவு தயாரித்துக் கொள்ளலாம். பீமகுண்டாவிலிருந்து ஸ்ரீசைலம் என்ற திருப்பருப்பதம் கோயிலுக்கு ஆறுமைல் செல்லவேண்டும். ஆத்மகூரிலிருந்து நான்குமைல் வரையில் நல்லவழியும் பிறகு எல்லாம் காடும் மேடும் பள்ளமும் குன்றுமாகவே யிருக்கும். பெரும்பாலும் மூங்கிற்காடும் சிறு பான்மை வேறு பலவகை மரங்களுமாக விருக்கும். வழி முழுவதும் இயற்கையழகு மிகுந்திருக்கும். பெத்த செருவிலிருந்து ஸ்ரீசைலம் வரையிலுள்ள பதினான்கு மைலில் பாதிவழி செங்குத்தான குன்றுகளின் மீதேறுவதாக விருக்கும்.

ஸ்ரீசைலத்துக்குக் கிழக்கே இரண்டரை மைலில் பாதாளகங்கைஎன்று ஒருநதி ஓடுகின்றது. இதுகிருஷ்ணாநதி யென்று சொல்லப்படுகிறது. இந்த நதிக்குப் போகும்வழியில் ஒருபாதி படிகளால் ஆக்கப்பட்டது. ஸ்ரீசைலத்துக்குச் செல்வோர் இந்நதியில் முழுகி தீர்த்தம் கொண்டுபோய் சிவலிங்க மூர்த்திக்கு அபிஷேகம் செய்கிறார்கள்.

ஸ்ரீசைலநாதர் திருக்கோயில் திரு மயிலாப்பூர் கபாலீச்சரத்தைப் போல் இரண்டுபங்கு விஸ்தீரணமுடையது. தரிசனத்துக்குச் செல்லும் யாத்திரிகர்கள் அனைவரும் ஆலயத்திலுள்ள மண்டபங்களிலும் கொட்டகைகளிலும்தான் தங்கவேண்டும். திருக்கோயிலைத் தவிர வேறுஊராவது சத்திரம் முதலியவைக ளாவது கிடையாது.

திருக்கோயில் தமிழ்நாட்டிலுள்ள சிவாலயங்களின் அமைப்பாகவே உள்ளது. நான்குபெரிய கோபுரங்களும் சிவபெருமான் சந்நிதிக்குமேல் பெரியதொரு அழகுவாய்ந்த ஸ்தூபியும் உள்ளன. கோயிலில் இரண்டு பிரகாரங்கள் உள்ளன. தனியாக முருகவேள் சந்நிதியும் சோமாஸ்கந்த விக்ரஹமும் கிடையா. மூன்று அழகிய நடராஜ விக்ரஹங்கள் உள்ளன. எல்லா உத்ஸவங்களும் சந்திர சேகரருக்கே நடக்கின்றன.

சிவராத்திரியை ஐந்தாம் திருவிழாவாகக் கொண்ட பத்துநாள் பிரஹ்மோத்ஸவம் நடைபெறுகின்றது. சிவராத்திரியன்று ரிஷபவாகன சேவை. செம்பினால் செய்யப்பட்ட ரிஷபத்தின் மீது சந்திர சேகரரை எழுந்தருளச் செய்து கோயிலுக்குள் வலம் வருதல் இவ்வுத்ஸவத்தின் நிகழ்ச்சி முறையாகும். தேர் முதலியன இவ்வூரிலில்லை. பிரஹ்மோத்ஸவத்தில் இராக்காலத்தில் மட்டும் ஒரு வேளைதான் உத்ஸவம் நடக்கிறது.

ஸ்ரீசைல நாதரை நாமே தொட்டு நீராட்டி மலர்தூவி வழிபாடு செய்யும் உரிமை நமக்குண்டு. ஆனால் அவ்வாலயத்திலுள்ள அம்பிகை சந்நிதியில்

நாம் அவ்வாறு செய்ய இயலாது. ஆங்கு சிவாசாரியரைக் கொண்டே வழிபாடு செய்யவேண்டும். சிவபெருமான் வீற்றிருந்தருளும் கருப்பக்கிரகம் ஏககாலத்தில் ஏறக்குறைய இருபது அன்பர்கள் இருந்து பூசை புரியக் கூடிய விஸ்தீரண முடையது. ஒருசதுர கெஜ முள்ள சதுரபீடத்தின் மீது ஆவிடையாரின்றி நாலங்குல உயரமுள்ள இலிங்க வடிவாகச் சிவபெருமான் உருக்கொண்டுள்ளார். இவ்விலிங்க மூர்த்திக்கே வழிபாடு நடக்கின்றது.

சிவராத்திரி விழாவுக்கு ஏறக்குறைய ஆயிரம் தமிழ் மக்களும், பதினாயிரம் தெலுங்கு கன்னடமக்களும் ஸ்ரீசைலம் செல்கிறார்கள். ஒவ்வொரு சோமவாரத்திலும் ஐதராபாக்கத்திலுள்ள சில பிரமுகர்கள் அபிஷேகாதிகள் செய்விக்கிறார்கள்.

ஸ்ரீசைலம் செல்பவர்கள் திரும்பும்போது நந்தியாலுக்கு 18 மைல் தூரத்திலுள்ள மகாநந்தி என்ற க்ஷேத்திரம் செல்லாமல் வருவதில்லை. இவ்விடத்தில் நூறடிக்கு நூறடி சதுரமான ஒரு குளமிருக்கிறது. அதில் நந்திவாயிலிருந்து சூடான சுத்த நீர் வந்துகொண்டேயிருக்கிறது. ஸ்ரீசைலத்தைச் சேர்ந்த மலைத் தொடர்ச்சி ஒரு நந்தி உருவமாகவும் அந்த நந்தியின் முதுகின் மீது ஸ்ரீசைல நாதர் வீற்றிருப்பதாகவும் அந்நந்தியின் வாயில்தான் நீர்வந்து கொண்டிருப்பதாகவும் அவ்வூரார்கள் கூறுகின்றனர். அதற்காகவே அவ்விடத்துக்கு மகாநந்தி என்றபெயர் வழங்கப் பட்டிருக்கிறது. இவ்விடத்திலும் சிவராத்திரியை யொட்டிப் பத்து நாள் விழா நடக்கிறது. பெரிய சிவாலயமும் தேர் முதலியனவும் உள்ளன. சத்திரம் முதலிய எல்லா வசதிகளும் இங்குண்டு.

சாதாரணமாகச் சென்னையிலிருந்து ஸ்ரீ சைலம் தரிசனம் செய்து திரும்புவதற்கு ஏறக்குறைய நாற்பது ரூபாய் செலவாகும். நந்தியாலிலிருந்து ஆத்ம கூருக்கு மோட்டார் பஸ் செலவு ஆள் ஒன்றுக்கு ரூபா 2, ஆங்கிருந்து பெத்த செருவுக்கு மோட்டார் டாக்ஸி செலவு ஆள் ஒன்றுக்கு ரூபா 3, பெத்த செருவிலிருந்து பீமகுண்டா, ஸ்ரீ சைலம், பாதாள கங்கை சென்று மீண்டும் பெத்த செருவுக்குத் திரும்புமளவும் ஒரு ஆள் செல்ல டோலி ஒன்றுக்கு ரூபா 25 செலவாகும். டோலியில்லாமல் நடந்து செல்வதற்கு உடல் வலிமிக்கிருக்கவேண்டும்.

இவ்விவரங்களைத் தெரிந்து கொண்ட பிறகாவது அன்பர்கள் அடுத்த சிவராத்திரிக்குத் திருப்பருப்பத யாத்திரை செய்வார்கள் என்று எதிர் பார்க்கிறோம்.



# பெரிய புராண இடைச் செருகல்கள்

[கோவை ஸ்ரீமான் சி. கே. சுப்ரமண்ய முதலியார், பீ. ஏ.]

(சென்னைச் சர்வ கலாசாலைப் பிரசங்கம்)

சேக்கிழார் பெருமானால் செய்தருளப் பெற்ற பெரிய புராணக் காவியத்துள்ளே பிற்காலத்துச் சில புலவர்களால் யாது காரணம் பற்றியோ சிற்சில இடைச்செருகல்களான பாடல்கள் செய்து சேர்க்கப்பட்டு அவையும் இந்நாள் வழக்கிலே புராணத்தோடு புராணமாய் வழங்கி வருகின்றன.

இடைச் செருகல் என்பது தொன்று தொட்டு எல்லா மொழிகளிலும் எல்லாப் பெரிய கவி வல்லோர் நூல்களிலும் காணப்படுவதொரு பழைய முறை. ஆங்கிலத்தில் மகா பெரிய நாடகாசிரியராகிய செகப் பிரியர் (Shakespeare) நாடகங்களில் கூட இவ்வாறு இடைச் செருகல்களைப் பிற்காலத்தார் புகுத்தி விட்டனர் என்று சொல்கிறார்கள். கம்பர் காலத்திலேயே அவரது இராமாயணம் அதிகமாகப் பயிலப்பட்டுத் தெருக்களில் பிரசங்கிக்கப்பட்டதெனவும், அவ்வாறு நடந்த ஒரு தெருப் பிரசங்கத்தைக் கம்பரே சென்று கேட்டு இதில் "என் பாட்டும் கொஞ்சம் இருக்கிறது" என்று சொன்னார் எனவும் ஒரு கதைகூட வழங்குகின்றது. அதாவது இராமாயணத்தில் புகுந்துள்ள இடைச்செருகல்கள் அதிகம் என்பது கருத்து. பெரிய ஆசிரியர் நூல்களினிடையே தங்கள் சொந்தச் சரக்குகளையும் சேர்த்துச் செருகி விட்டால் தங்கள் சிறு வாக்குகளும் அவர்களது பெருவாக்குகளோடு விலை மதிப்பும் ஏற்றமும் பெறும் என்று பிற்காலத்துச் சிறு புலவர்கள் கருதினர் போலும்! தமக்கென்று வேறு தனி மதிப்புப் பெற இயலாத சிறியோர், பிறர் சார்பு பற்றிக் கொண்டு பெருமை யடைவது எங்கும் மனித இயற்கையிலே கண்ட ஒரு உண்மையே யாம். இவ்வாறு நாம் காண்கிறபடி பெரிய புராணத்திலேயும் பல பாட்டுகள் இடைச் செருகலாகப் புகுத்தப் பெற்றுள்ளன என்பதை மறுக்க இயலாது.

* * * * *

பெரிய புராணத்தில் பிற்காலத்தில் இடைச் செருகல்களாக 33 பாட்டுகள் வரை புகுத்தப்பட்டன என்பது மட்டும் நிச்சயமாய்த் தெரிகின்றது. சேக்கிழார் புராணம் அல்லது திருத்தொண்டர் புராண வரலாறு செய்தருளிய உமாபதி சிவாசாரியார் பெரிய புராணத்தின் அமைப்பையும் அதன் காண்டம், சருக்கம், பாட்டு இவற்றின் தொகை வகைகளையும் தாம் கண்டவாறு ஏறக்குறைய 600 ஆண்டுகளின் முன்னரே அளவுபடுத்தி வைத்துள்ளார்.

"காண்ட மிரண்டா வகுத்துக் கதைப் பரப்பைத் தொகுத்துக்
கருதரிய சருக் கங்கள்பதின்மூன்றா நிலையிட்டு
ஈண்டுரைத்த புராணத்தில் திருவிருத்த நாலா
யிரத் திருநூற் றைம்பத்து மூன்றாக அமைத்துச்

சேண்டகைய திருந்தோண்டர் புராணமெனப் புராணத்
திருமுறைக்குத் திருநாமம் சீர்மைபெற அமைத்திட்டு
ஆண்டகைமை பெறவெழுதி மைக்காப்புச் சாத்தி
அழகுபெறக் கவளிகையும் அமைத்ததில் வைத்தற்பின் ''

என்பது அவர் வாக்கு.

இடைச்செருகலை எவ்வாறு காண்பது ?

இனி இப்போது கிடைக்கும் ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் பதிப்பின் படிக்கும், ஆறுமுக நாவலர் பதிப்பின் படிக்கும் கண்ட (4286-4253) அதிகப்படியான 33 பாடல்கள் யாவை என்று கண்டு பிடிப்பது கடினம்தான். * * * இவற்றைக் கண்டுகொள்வதற்கு விதிகள் வேறு வேண்டும்.

அவை யாவன :—வாக்கும் பாட்டின் போக்கும் சேக்கிழாரது பிற நயப்பாடுகளும் இடவமைதியும் பல பிரதிகளின் ஒப்புமையும் பிறவுமாம். காஞ்சிபுரம் வித்வான் சபாபதி முதலியாரவர்களின் சித்தார்த்தி வருஷத்திய பதிப்பு ஒன்றும் பிரமோதூத வருஷப் பதிப்பு ஒன்றும் இப்போது நாம் பார்க்கக் கிடைக்கின்றன. அவைகளின்படி (புத்தக இறுதியில் ஆக திருவிருத்தம் 4299 என்று கண்டிருப்பது கணக்குத் தவறு) புராணத்தின் மொத்தம் ஆக திருவிருத்தம் 4282 மட்டும் என்று தெரிகிறது. ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள், ஆறுமுக நாவலர் பதிப்புகளின்படித் திருவிருத்தங்கள் மொத்தம் 4286 பாடல்கள் உள்ளன. ஆறுமுக நாவலர் அவர்களின் முதற் பதிப்பு 1884-ல் வெளி வந்ததாய்த் தெரிகின்றது. ஆனால் அதனை அவர்கள் முற்றும் பரிசோதித்து வெளியிடுவதற்கு முன்னரே சிவபெருமான் திருவடி நீழல் அடைந்ததாயும் அது பின்வந்த பெரியோர்களால் அச்சிடப் பெற்றதாயும் தெரிகின்றது. ஒரு பதிப்பிற் கண்ட சில செய்யுட்கள் மற்றப் பதிப்பிற் காணப்படவில்லை. ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்திலே,

“ ஆண்ட நம்பியுடன் வந்த அன்பரோடும் புறத்தணைந்து
நீண்ட மதிட் கோபுரங் கடந்து நிரைமாளிகை வீதியிற் போந்து
பூண்ட காதல் மிகுதியினாற் புனைமங்கல தூரிய மொலிப்ப
ஈண்டு புகழ்க் கோட்புலியார் மாளிகையை எய்தியுள்ளணைந்தார் ''

என்று 34-வது பாட்டாக ஒரு செய்யுள் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் முதற் பதிப்பிற் காணப் பெறுகின்றது.

அன்றியும் புராணத் திறுதியில்,

“ வைய நீடுக மாமழை மன்னுக, மெய் விளங்கிய அன்பர் விளங்குக
சைவ நன்னெறி தாந்தழைத்தோங்குக, தெய்வ வெண்டிரு நீறு சிறக்கவே ''

என்ற ஒரு வாழ்த்துப் பாட்டு ஷை பதிப்பிற் காணப்பெறுகின்றது. இவையிரண்டும் ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள், ஆறுமுக நாவலர் பதிப்புகளில் காணப்படவில்லை. மேலே கண்ட ‘ ஆண்டநம்பி ’ என்ற செய்யுளுக்கும்

ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணத்திலேயே மேலே 186-ம் பாட்டாகிய,

"ஆண்ட நம்பி யெதிர்கண்ட அடியார் வணங்க எதிர் வணங்கி
நீண்ட மதிட் கோபுரங் கடந்து நிரைமாளிகை வீதியிற் போந்து
பூண்ட காதல் வாழ்த்தினுடன் புனைமங்கல தூரிய மொலிப்ப
ஈண்டு தொண்டர் பெருகு திரு ஏகாம்பரஞ் சென் றெய்தினார்"

என்பதற்கும் ஒற்றுமை பெரிதும் காணப்படுகின்றது. மேலும் மேலே காட்டிய 34-ம் பாட்டு இந்த இடத்தில் வேண்டப்படாமலே சரிதப்பொருள் தொடர்பாய்ச் செல்கின்றது. அன்றியும்,

"..............எதிர்கொண் டினிதிறைஞ்சிக்
கோலமணி மாளிகையின் கண் ஆர்வம் பெருகக் கொடுபுக்கார்" 34

என்று மாளிகையின் உள்ளே உபசாரத்துடன் அழைத்துச் செல்லப் பெற்ற நாயனாரைப் பின்னும் வெளியில் கொண்டுவந்து வைத்துப் புறத் தணையவும், வீதியிற் போகவும், அதன்பின் உள்ளணையவும் செய்து விடுகின்றது இச்செய்யுள். ஆதலின் இது இடைச்செருகலாக இருக்கும் என்பது ஐயம். 'உலகெலாம்' என்று இறைவன் எடுத்துத் தந்த முதலடியைப் புராண முதலிலும் இடையிலும் இறுதியிலும் வைத்துக் காவியத்தைப் பூர்த்திசெய்த சேக்கிழார் சுவாமிகள் அதன் மேலும் ஒரு வாழ்த்துக்கவி சொல்லுதல் இயல்பல்ல. மேலும்,

"மன்னுளார் அடியவர் வான்புகழ் நின் றதெங்கும் நிலவி உலகெலாம்"

என்று இப்புராண காவியத்திற்குரிய வாழ்த்தினைக் கூறி முடித்து வைத்துள்ளார். ஆதலின் மேலே காணும் 'வைய நீடுக' என்ற கவியும் ஐயப்பாடான செய்யுளே.

## கண்ணப்ப நாயனார் புராணம்

இனிக் கண்ணப்ப நாயனார் புராணத்தில், 157-வது "திரு விருத்தத்திற்கு மேல் வெள்ளித் தம்பிரான் சேர்த்த 5 பாடல் சில பிரதிகளிலிருக்கும்" என்று காஞ்சிபுரம் வித்வான் சபாபதி முதலியார் தமது பதிப்புகளிற் குறிப்பிட்டமையாலும், அப்பாடல்களில் பொருள் சிறவாமை, பாட்டுகளின் வாக்கும் போக்கும் வேற்றுமைப் படுதல், இடத்திற்கு அவசிய மின்மை, இவையன்றியே பொருள் தொடர்ந்து செல்லுதல் முதலிய காரணங்களாலும் இவ்வைந்தும் இடைச் செருகல்கள் என்று கொள்ள ஏதுவுண்டு.

## கலிய நாயனார் புராணம்

இனிக் கலியநாயனார் புராணத்திலே 2-வது பாட்டாக,

"பீடுகெழும் பெருந் தெருவும் புத்தரொடு பீலியமண்
வேடமுடையவர் பொருள்போல் ஆகாய வெளி மறைக்கும்
ஆடுகொடி மணி நெடுமாளிகை நிரைகள் அலைகமுகின்
காடனைய கடல்படப்பை யெனவிளங்கும் கவின் காட்டும்"

செய்யுள் ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள் ஸ்ரீ நாவலர் அவர்கள் பதிப்புகளிற் காண்கின்றது.

"இப் பாடல் பழைய ஏட்டுப் பிரதிகளிற் காணப்படாமையால் வெள்ளிப் பாடல் என்னும் வேற்றுப் பாடலென்பர்" என ஸ்ரீ ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளே அதன்கீழே குறித்துள்ளார்கள். அன்றியும் இதிற் சேக்கிழார் சுவாமிகளுக்கே உரிய முத்திரைப் பொறி ஒன்றும் காணப் பெறவில்லை. எனவே இதனையும் இடைச் செருகல் எனக் கொள்வதில் இழுக்கில்லை.

## திருமலைச் சிறப்பு

இனித் திருமலைச் சிறப்பு 8-வது பாட்டாகிய 'காதில் வெண் குழையோன்' என்ற பாட்டை 'இது வெள்ளிப் பாடல்' என்றே பெயரிட்டுப் பதிப் பித்தார்கள் காஞ்சிபுரம் வித்வான் சபாபதி முதலியார் அவர்களும் ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகளும். அதன் நிலையும் அவ்வாறே உள்ளதாம். எனவே வெளிப்படையாய்த் தெரிந்தவை யாகிய மேலே கண்டவைகளைக் கண்டு நீக்கி விடுதல் சுலபம்.

* * * * *

எனது சிற்றறிவின் குறுகிய ஆராய்ச்சி முறையினாலே உண்மையாகவே சேக்கிழார் சுவாமிகள் திருவாக்காகிய பாடல்களையும் எங்கேயாவது தவறாக அவருடைய வாக்கு அல்ல என்று ஒதுக்கி விடுவோமாயின் அது பெரும்பாதகமும் சிவாபராதமும் ஆகும் என்ற அச்சம் என்னை மிகவும் தாக்குகின்றது. அவ்வச்சத் துடனேயே கீழ்வரும் பாடல்களைப் பற்றிய எனது ஐயப்பாடுகளை வெளியிடலானேன். பிழை பொறுத்தல் பெரியோர் கடன்.

## ஆனாய நாயனார் புராணம்

ஆனாய நாயனார் புராணத்தில் 19-வது "நீலமா மஞ்ஞை ஏங்க" என்று தொடங்கும் பாட்டு அந்த இடத்தில் அமைதிபெறவில்லை. அதற்கு முன்னும் பின்னும் தொடர்ந்து கொச்சகக் கலிப்பாவினால் சரிதத்தைச் சொல்லிப்போகும் கதைப் போக்கிலே இந்த அறுசீர் விருத்தம் பொருட் பொலிவும் பொருத்தமும் சொற்பொலிவு மின்றி உட்புகுந்து கொண்டதாகவே தோன்றுகின்றது. முத்திபெறும் அந்நாளிலே ஆனாய நாயனாரை அலங்கரித்து நிறைகாக்கப் புறம்போகச் செய்த சேக்கிழார் சுவாமிகள் அவ்வாறு போதுகின்ற செலவின் இடையிலே இடைப் பிறவரலாய்க் குறுக்கிட்டுக் கார்ப்பருவ நல்லாளை ஆடரங்கில் ஆடவைத்திருக்க மாட்டார் என்பதும் பொருந்தும்.

## திருக்குறிப்பு

திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்திலே 99, 100, 101பாடல்களிலே சிற்சில ஐயப்பாடுகள் தோன்றுகின்றன.

(99) 'அருமறை யந்தணர்....' "வருமுறைமை யழைத்துவிடும் மந்திர மெம்மருங்கும்" என்ற தொடர் எடுத்துக்கொண்ட எண்சீர் விருத்தயாப்பிற்குப் பொருந்தக் காணவில்லை.

"அவிப்பாகங் கொடுக்கும்"

இவ்வாறு சேக்கிழார் வேறெங்கும் வழங்கக் காணவில்லை. சொற்போக்கும் வேறுபாடு காண்கின்றது.

"மறையோ ரீந்த அவியுணவின் பாகருகர்" —சண்டேசர் 4.

எனவும்,

"எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டேட்டும்" —கண். 147.

எனவும் வரும் இடங்களின் சொற்பொலிவை ஒட்டி நோக்குக. அன்றியும் வேள்விச் சாலைகளும் பாடசாலைகளும் அந்நாள்நகர அமைப்பிலே புறநகரிலே அமைக்கப்பெற்றன என்பது சண்டேசநாயனர் புராணத்தும்(3-முதல் 8-வரை பாடல்கள்) பிற இடங்களிலும் காணலாம். அவற்றை உள் நகரிலே மறையவர் தெருவில் மாடமாளிகைகளுக் குள்ளேயே இருப்பதாக இப்பாட்டுக்கூறுவது கூர்ந்து நோக்கற் பாலது. மேலும் அந்தணர் சிறப்பையும் அமைதியையும் மேலே 76-வது பாடலினுள் வைத்துப் பேசினமையும், ஓரிடத்துச் சொன்ன பொருளேயே பிறிதோ ரிடத்தும் மீண்டும் திருப்பிச் சொல்லாமை யாகிய சேக்கிழார் சுவாமிகளது இயல்பும் சிந்திக்கத்தக்கன.

அரசர்கள் செயல்களாகிய தேர் ஏறுதல் யானையேற்றம் குதிரையேற்றம் முதலியவற்றையும் தேர் வீதியினையும் சூழ்ந்த பெரு மாளிகைகளேயும் 96, 97, 98 பாடல்களிற் சுவையும் அழகும் பெற அமைத்த ஆசிரியர் மீண்டும் அதனைப்பற்றி 'அரசர்குலப் பெருந் தெருவும்' என்ற 100 - வது பாடலிற் பேசியமை ஆராயத் தக்கது ; இதுபோலவே,

"மாறுபெற லருங்கனக மாடநீடு மணிமறுகு நெடுந் தெருவும் வளத்தில் வந்த
ஆறுபயில் ஆவண வீதிகளும் மற்றும் அமைந்த நகர் அணிவரைகள் நடுவுபோக்கி"

என்ற பாட்டினுல் ஆவண வீதிகளேயும் அதிற்பயிலும் வணிகர் சிறப்பையும் பேசியபின் மீண்டும் 101-வது பாட்டிலே,

"வெயிலுமிழும் பன்மணிப்பூண் வணிகமாக்கள் விரவுநிதி வளம் பெருக்கும் வெறுக்கை"

எனப்பாடி வைத்தலின் அவசியமும் ஆராய்த் தக்கது. அன்றியும் இப்பாட்டில் (101.)

"மயிலைமலை யார்க்கச்சி யாலயங்கள் பலவும்"

என்ற தொடர் எடுத்துக்கொண்ட எண்சீர்விருத்த யாப்பிற்குப் பொருந்தாமையும் காணத்தக்கதாம். இம்மூன்று பாடல்களின் சொற்போக்கும் பொருட் பொலிவும் இங்கே ஆராயத் தக்கதாகும்.

திருநாவுக்கரசு நாயனர்

திருநாவுக்கரசு நாயனர் புராணம் 356-வது 'வெங்கதிர்ப் பகலக்கடத்திடை' என்றபாட்டு அப்பர் சுவாமிகளது திருக்கயிலை யாத்திரையின்

இடையிடிட்டு வருணனையினுற் குறுக்கிடக் காண்கின்றோம். முன்பின்பாட்டுகளிலே சுவாமிகளது சரிதம் தொடர்ந்து செல்கின்ற செலவிலே இப்பாட்டு இன்றியமையாத தாய்க் காணவில்லை.

## திருஞானசம்பந்தர்

திருஞான சம்பந்த நாயனர் புராணத்திலே முன் பின் தொடர்பையும் யாப்பமைதி, பொருளமைதி, இடவமைதிகளையும் பார்க்கும்போது 466-ம் பாட்டாகிய,

"மற்றவர் தம் பெருங்கேண்மை மகிழ்ந்து கொண்டு"

என்ற பாடல் இடைச் செருகலாயிருக்கும் என்ற ஐயம் தோன்றுகின்றது.

இவ்வாறே திருஞான சம்பந்த நாயனர் புராணம் 705-வது

"பாண்டிமா தேவியார் தமது பொற்பில்"

என்ற தனி எண்சீர் விருத்தமானது கதைத் தொடர்ச்சியாய் முன்பின் நிகழ்கின்ற கலி நிலைத்துறைப் பாட்டுகளுக்குள் போய்ப் புகுந்து கொண்டு நிற்கின்றது. இது 'பையவே சென்று' என்ற நாயனர் பதிகச் சொற்றொடரின் விரிவுரை கருத்துரை போல இயற்றப் பட்டதாய் விளங்குகின்றது. இப்பாட்டினுற் பெறக்கருதிய பொருள் மேலே

"(சைவர் வாழ் மடத் தமணர்களிட்ட) தீத்தழல் போய்ப்
பையவே சென்று பாண்டியற் காகெனப் பணித்தார்" 704

என்றதாலும்,

"........................திருவாலவாயின்
மருந்தினைச் சண்பை மன்னவர் புனைந்திட வருளால்
விரிந்த வெந்தழல் வெம்மை போய்த் தென்னனை மேவிப்
பெருந்தழற் பொதிவெ துப்பெனப் பெயர் பெற்ற தன்றே"

என்றதாலும் பெறுகின்றோம். அன்றியும் இப் பாட்டிலே

"பாதுகாத்தும், அன்பினுலும், அபராத முறுதலாலும், விதியினுலும் பேறுடைய ஞதலாலும்" என்ருர் என்ற முடிபுகளும் கூர்ந்து ஆராயத் தக்கன.

இன்னும் இதுபோலவே ஷைபுராணம் 715, 716-வது 'மால் பெருக்கும்,' 'கருகிய மாசுடையாக்கைத் தீயோர்' என்ற இரண்டு பாடல்களும் ஐயப்பாடு உள்ளனவாய்த் தோன்று கின்றன. இவைகளின் போக்கு வேறுபடு கின்றது. அன்றியும் மேலே 713-வது பாட்டிலே 'கருத்தொழிந்துரை மறந்தனன் கௌரியர் தலைவன்' என்று சேக்கிழார் சுவாமிகள் சொல்லியிருப்பவும், இந்த 716-வது பாட்டு 'ஒருவரு மிங் கிருமருங்கும் இராது போமென் றமணரைப் பார்த்து உரைத்த அரசன் உணர்வு சோர்ந்தான்' என்று அவ் வரசனுக்கு மீண்டும் உணர்வும் பேச்சும் சோர்வும் கொடுக்கின்றன.

பின்னும் இப்புராணம் 734-735 பாட்டுக்கள் முன் பின் தொடர்பிலே இடையீ டிட்டு அறுசீர் ஆசிரியமும் கொச்சகக் கலிப்பாவுமாக மாறி மாறி வருகின்றன. மேலும்,

" ஒன்றுநீர் அஞ்சவேண்டா : உணர்விலா அமணர் தம்மை
யின்று நீர் உவகை யெய்த யாவருங் காண வாதில்
வென்றுமீ னவனை வெண்ணீ றணிவிப்பன் விதியால் "

என்று சுவாமிகள் சொல்லியதாகச் சொல்லும் 734 வது பாட்டு பின்னர்

" ஆவதும் அழிவு மெல்லாம் அவர் செயல் அமண ராகும்
பாவகாரிகளை நோக்கும் பழுதுடன் நீங்க வெல்லச்
சேவுயர் கொடியினுற் தம் திருவுள்ளம் அறிவேன் என்று
பூவலர் பொழில்சூழ் சண்பைப் புரவலர் போதுகின்றார் "

என்ற பாட்டுடன் ஒப்பு நோக்கி ஆராயத் தக்கது.

பின்னும் இப் புராணத்தில் 812-வது 'கார்கெழு பருவம் வாய்ப்பக்கா முறு மகளிருள்ளம்' என்ற பாட்டு ஆனாய நாயனர் புராணத்து மேலே காட்டிய 19-வது 'நீலமா மஞ்ஞை' என்ற பாட்டினுடன் பிறந்தது போலக் காண்கின்றது. இட வமைதியும் பொருட் பொருத்தமு மின்றிய வெறும் வருணனையாகக் காண்கின்ற இப் பாட்டு அவ்விடத்தே இன்றி யமையாது வேண்டப் படுவதாகவும் காணவில்லை.

## ஏயர்கோன்

இனி ஏயர்கோன் கலிக்காம நாயனர் புராணம் 122-வது 'காட்டுநல் வேள்விக் கோலம்' என்றபாட்டு எவ்விதப் பொருளமைதியு மின்றி உட் செறுகியதாகக் காண்கின்றது. இப்பாடலை நீக்கிவிட்டுப் படித்தால் புராண சரிதம் எவ்வாற்றானும் இடையீடின்றிச் செல்கின்றமை காணத்தக்கதாம்.

## சாக்கியர்

மேலும் இதுபோலவே சாக்கிய நாயனர் புராணம் 7-வது 'எல்லா முடைய ஈசனே இறைவனென்ன அறியாதார்' என்றபாட்டு ஐயப்பாடுள்ள தாம். அப்புராணம் முழுதும் கொச்சகக் கலிப்பா என்ற ஒரே பாவினல் இயன்றிருக்க இது ஒன்று மட்டும் தனித்த அறுசீர் விருத்தமாய் அதனுள் நுழைந்து கொண்டு காணப்படுகின்றது. அன்றியும் இப்பாட்டு உட்கருத் துச் சிறவாமையும் மேலே 6-வது பாட்டின் பொருளையே அனுவதித்துத் திரும்பச் சொல்லியதாகவும் காண்கின்றது. இதனை யின்றியே சரிதமும் தொடர்ந்து செல்கின்றது. மேலே இவ்வாறே ஒரேவகைச் செய்யுளால் இயன்ற குங்கிலியக் கலய நாயனர் புராணம், மானக்கஞ் சாறநாயனர் புரா ணம், மூர்த்தி நாயனர் புராணம் (29-30-வது பாட்டுகள் தவிர) இவை களையும் காண்க. ஒரு சரிதத்தையோ அல்லது சரிதத்தின் ஒரு பகுதி யையோ ஒருவகைச் செய்யுளால் பாட ஆரம்பித்தால் பெரும்பான்மை அதனைத் தொடர்ந்து அந்த வகை யாப்பு அமைதியுள்ள செய்யுளாலே

சொல்லிப் போதல் சேக்கிழார் சுவாமிகளது இயல்பாம். இவ்வாறு போதற் கிடையில் வேறு வகையாகச் செய்யுள் தனித்து இடையில் வரக்கண்டால் அதனை ஆராய்ந்து தெளிதல் நமது கடமையாகும். சரிதத்தைத் தனித் தனி வெவ்வேறு வகைச் செய்யுள்களால் துண்டித்துச் சொல்லிப்போதல் சுவாமிகளது இயல்பல்ல. பெரும்பற்றப் புலியூர் நம்பி திருவிளையாடற் போக்கை இங்கே ஒப்பிட்டு வேறு பாட்டைக் கண்டு கொள்க.

மூர்த்தி நாயனர்

இனி மேலேகூறிய இயல்பின் துணை கொண்டும் இட வமைதியின்மை இன்றியமையாமை யின்மை, முன்னர்ச் சொன்ன கருத்தையே அனுவதித் தல்முதலிய காரணங்கொண்டும் மூர்த்திநாயனர் புராணம் 29,30-வது 'பன் முறை உயிர்களெல்லாம்' 'இவ்வகை பலவு மெண்ணி' என்ற பாடல்களும் ஐயப்பாடுள்ளனவாய்க் காண்கின்றன. 29-வது பாட்டின் கருத்து மேலே 28-வது 'மன்னன் காவலின்றி வாழுந் தகைத்தன் றிந்தவையகம் என்று சொன்னுர்' என்பதனுலும் 30-வது பாட்டின் கருத்துக் கீழே 31-வது "கைம்மாவை நலுந்துகில் கொண்டு கண்கட்டி விட்டார்" என்றதனுலும் பெறப்படுதல் காண்க.

(தொடரும்)

# பிறவிக்கடல் நீந்தபிரான்

[சே. சிவஞானம் பிள்ளை]

[இது சுக்கிலஞு சித்திரைமீ 22உ (6-5-29) திருவதிகை, சைவசித்தாந்த சங்கத் தின் ஆதாவில் திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீலஸ்ரீ சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் தலைமையின்கீழ் நடைபெற்ற கூட்டத்தில், திருமயிலை - தமிழறிஞர் சே. சிவஞானம் பிள்ளை அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவின் சுருக்கம்.]

"கொண்ட லாடிய விழகளுங் கோலவெண் ணீற்று
வண்ட லாடிய மேனியு மல்குமா னந்தம்
உண்ட தாங்கெதிர் எடுத்தென ஓதுசெம் பாட்டும்
கண்டு கேட்டருள் நாவினுக் கரசினைக் கலப்பாம்"

அவதாரமும் பாமாலை பாடப் பயில்வித்தலும்

திருவாமூரிலே, வேளாண்மரபிலே குறுக்கையர் என்பவரை மூல புருடராக உள்ள குடியிலே புகழனுர் என்னும் புண்ணிய சீலர் ஒருவர் இருந் தனர். அவர் மாதினியார் என்னும் கற்பரசியாருடன் எவ்வறத்திலும்மேம் பாடுடையதாகிய இல்லறத்தை நடாத்தி வருநாளில், செந்தாமரையிற்றிக ழும் திருமகளே என்னலாம் சிறப்பு வாய்ந்த திலகவதியார் என்னும் பெண் மணியார் பிறந்தனர்.

"திலகவதி யார்பிறந்து சிலமுறையாண் டகன்ற தற்பின்
அலகில்கலைத் துறைதழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ

உலகில்வரும் இருள்நீக்கி ஒளிவிளங்கு கதிர்போல
மலருமரு ணீக்கியார் வந்தவதா ரஞ்செய்தார்''

(2) மாதினியார் திருவயிற்றில் வந்து அவதாரஞ் செய்த மருள்நீக்கியாருக்கு அவர் தந்தையார் செய்யவேண்டிய சாதககன்மம் நாம கரணம் முதலிய மங்கலச் சடங்குகளை எல்லாம் செவ்வனே செய்து முடித்துக் கலை பயிலத் தொடங்குவித்தனர். மருள்நீக்கியார், தன் தந்தையார் மன மகிழ்ச்சி எய்தப் பற்பல கலைகளிலும் பயின்று மேம்பாடடைந்து மறு வொழிந்த இளம் பிறைபோல் வளர்வாராயினர். இஃதிவ்வாறாகத் திலக வதியார் என்னும் பெண்மணியாருக்குப் பன்னிரண்டு யாண்டு நிரம்புவ தாயிற்று. புகழனார் பிறந்த குறுக்கையர் குடிக்கு ஒத்த குடியிற் பிறந்த கலிப்பகையார் என்னும் பெரியார் திலகவதியாரை மணம் புணரும் நோக் கத்துடன் தக்க முதியோரைப் புகழனார்பாற் பெண் பேசச் செலவிட்டனர். புகழனாரும் தம்பாற் போந்த பெரியோரை அன்புடன் வரவேற்று முகமன் கூறி குலம் முதலியன வினவித் தனது குமாரத்தியைக் கலிப்பகையாருக்கு மணம்செய்து கொடுக்க ஒருப்பட்டனர்.

(3) கலிப்பகையார், மணவினை முடிப்பதற்கு முன்னரேயே, அரசன் ஏவலால் மாற்றூர் மேற் செல்ல வேண்டி அவர் அகன்றனர். போர்மேற் சென்ற கலிப்பகையார் அங்கேயே நெடுநாள் தங்கவேண்டியதாயிற்று. கலிப் பகையார் மீண்டு வருமுன் புகழனார் மண்ணுலகைவிட்டு விண்ணுலகடைந்த னர். அவர் மனைவியாராம் மாதினியாரும், மக்களையும் சுற்றத்தாரையும் துகளெனவே நினைத்து, கற்பு நெறி வழுவாமல் தன் கணவனாருடன் சென்ற னர். தாய் தந்தையர் இருவரும் இறந்துபட்ட துக்கத்தினாலே திலகவதி யாரும் மருள்நீக்கியாரும் பெருந் துயரத்திலழுந்தினர். பிறகு சுற்றத்தார் தேற்ற ஒருவாறு தெளிந்து தாய் தந்தையர்கட்குச் செய்யவேண்டிய சாம கிரியைகளைச்செய்து முடித்தனர். திலகவதியாரை மணமாட நிச்சயித்துப் போர் மேற்சென்ற கலிப்பகையார் போர்க்களத்தில் உயிர் கொடுத்துப் புகழ் கொண்டனர். இதனைக்கேட்ட திலகவதியார்,

"எந்தையும் எம்மனையுமவர்க்கு எனைக்கொடுக்க இசைந்தார்கள்
அந்த முறையால் அவர்க்கே உரியது தானாதலினால்
இந்த உயிர் அவரோடு இசைவிப்பன் எனத்துணிய
வந்தவர்தம் அடியிணைமேல் மருணீக்கியார் விழுந்தார்''

தமக்கையாராம் திலகவதியார் அடி இணைகளின் மேல் விழுந்த மருள் நீக்கியார் மிகவும் புலம்பி, 'தாய்தந்தையர் இறந்துபட்ட துயரம் உம்மை வணங்குதலினால் ஒருவாறு தெளிந்து உயிருடன் இருக்கின்றேன். தாமும் உயிர் நீப்பின் யானும் தங்கட்கு முன்னரே உயிர் நீப்பேன்' என்று பகர்ந்து இடரில் அழுந்தினர். இதனைக் கேட்ட திலகவதியார், 'தம்பியார் உயிருடன் இருக்கவேண்டும் என்னும் பரிவினால் தான் ஆபரணங்கள் முதலியவைகளை அணியாமல் எல்லா உயிர்களிடத்தும் அருளுடையராய் உயிர்தாங்கி இருந் தனர். மருள்நீக்கியார் தம் தமக்கையார் உயிர் துறவாதிருந்தமையைக் கண்டு சாலமகிழ் வெய்தினர்.

(4) தக்கவயது வந்தபிறகு மருள்நீக்கியார் உலகியலின் நிலையின்மையை உணர்ந்து பற்பல அறங்களைப் புரிந்தனர். அகம்புறம் என்னும் சமயங்களில் எச்சமயத்தினைச் சாரின் ஆன்மா உய்யும் என்பதை ஆராய்வான் தொடங்கினர். இவ்வாறு ஆராய்ச்சி செய்த மருள்நீக்கியாருக்கு நல்லாறு தெரிந்து உணர நம்பர் அருளாமையினல், அவர் கொல்லாமை மறைந்துறையும் அமண் சமயம் குறுகினர். அமண் சமயம் புக்க மருள்நீக்கியார் பாடலிபுரத்திற்குச் சென்று (திருப்பாதிரிப்புலியூர்) சமண் பள்ளியைச் சார்ந்தனர். சமண் பள்ளியைச் சார்ந்தவர் அங்கேயுள்ள சமணர்கட்கெல்லாம் மோக்ஷத்தைத் தரவல்ல சமயம் சமண சமயமே என்று போதித்துச் சமண நூல்களைக் கற்று வல்லவராய் அவர்கட்குள் தலைமை எய்தி தருமசேனன் என்னும் பட்டப்பெயரும் பெற்று விளங்கினர். சேனன் என்பது சமணர்கட்குள் ஏற்பட்ட பட்டப்பெயர் என்பதனை,

“சந்துசேனனும் இந்துசேனனுந் தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனும் முதலாகிய பெயர்கொளா
மந்திபோற்றிரிந்து ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயனறிகிலா
அந்தகர்க் கெளியேனலேன் திருவாலவாயரன் நிற்கவே”

என்னுந் திருஞான சம்பந்தர் தேவாரத்தாலறியலாம்.

(5) தன் உடன் பிறந்தவராகிய மருள் நீக்கியார் சமண சமயம் சார்ந்த பிறகு திலகவதியார் சிவபெருமான் திருவடிப்பேற்றைப் பெறுவான் எழுந்த பெருவிருப்பால் திருவாமூரை விட்டகன்று திருவதிகை வீரட்டானத்தைச் சார்ந்தனர். திருவதிகையைச் சார்ந்த திலகவதியார் சிவசின்னந் தாங்கி இறைவன் திருக்கோயில் கொண்டிருக்கும் ஆலயத்தில் திருப்பணிகள் செய்தலை மேற்கொண்டனர். அவர் புரிந்த திருப்பணி எவை எனிலோ,

“புலர்வதன்முன் திருவலகுபணிமாறிப் புனிறகன்ற
நலமலியான் சாணத்தால் நன்குதிரு மெழுக்கிட்டு
மலர்கொய்து கொடுவந்து மாலைகளுந் தொடுத்தமைத்துப்
பலர்புகழும் பண்பினல் திருப்பணிகள் பலசெய்தார்”

என்னும் அருண்மொழித் தேவரின் திருவாக்கின்படி திலகவதியார் புலரியில் எழுந்து, புனலில் மூழ்கி, புனிதவெண்ணீறு அணிந்து, திருக்கோயிலில் திருவலகிடுதல் திருமெழுக்கிடுதல், நந்தனவனத்துட்புக்கு மலர் கொய்து மாலைகள் தொடுத்தல் முதலிய திருத்தொண்டுகளைப் புரிந்து வருவாராயினர். திருவதிகை வீரட்டானஞ் சார்ந்து சிவசின்னந் தாங்கித் திருக்கோயில் திருப்பணிகள்செய்துவரும் திலகவதியார், தம் பின் பிறந்த மருள்நீக்கியார் தீவினைவயத்தால் பரசமயஞ் சார்ந்து ஒழுகுவதனல் மனக்கவலை உற்று இடர் உழந்தனர். மனக்கவலை யடைந்த தூண்டுதவ விளக்கனையாராம் திலகவதியார் சுடரொளியாகிய திருவீரட்டானேசுரரைத் தொழுது, ‘என்னை ஆண்டருளுனீராகில் அடியேன் பின் போந்தவனைத் தவமென்று பாய் இடுக்கித் தலைபறித்து நின்றுண்ணும் அவமொன்று பரசமயக் குழியினின்றும் எடுத்தருளவேண்டும்’ எனப் பலமுறையும் விண்ணப்பஞ் செய்தனர். திலகவதியார் விண்ணப்பஞ் செய்ததனுக்குச் செவிசாய்த்த

வினைதீர்க்கும் பரமர் மன்னு தபோதனியார்க்குக் கனவின் கண் போந் தருளி,

"உன்னுடைய மனக்கவலை ஒழிநீ உன்உடன் பிறந்தான்
முன்னமே முனியாகி எனையடையத் தவமுயன் றுள்ளான்
அன்னவனை இனிச் சூலைமடுத் தாள்வம்"

என்று திருவாய் மலர்ந்து திருவுருக்கரந்தனர்.

(6) இறைவன் திலகவதியார்க்கு அருள்புரிந்தவண்ணம் மருள்நீக்கியார் பால்சூலைநோய் செல்லும்படி திருவுளம்பற்றினார். சூலைநோய் தருமசேனர் வயிற்றில் வடவனலும், கொடுவிடமும், வச்சிரமும் போல் புகுந்து குடைதலுற்றது. அதனால் அவர் மிகவும் வருந்தித் தளர்வெய்திப் பள்ளியின்கண் மூர்ச்சித்து விழுந்தனர். சமண சமயத்தில் தாம் பயின்று வந்த விச்சைகளால் அதனைத் தடுக்க முயன்றும் பயன்படாது சூலைநோய் மேன்மேலும் முடுகி வேதனை அதிகரித்திட நச்சராவின் விடம் தலைக்கொண்டாலென மயங்கி அறிவு மாழ்கிக் கிடந்தனர். தம் தலைவராகிய தருமசேனர் சூலையால் வருந்தி வீழ்ந்திடக்கண்ட அமணர் பலரும் ஒருங்குகூடி 'இச்சூலைநோய்போற் கொடியதொரு நோய் யாம் முன்பு கண்டோமில்லை; இதற்கு யாது செய்வம்' என்று வருந்தித் தம் குண்டிகை நீரை மந்திரித்துக் குடிப்பித்தனர். அதனால் சூலைநோய் தணியாமையைக்கண்டு தம் கையிலுள்ள பீலிகொண்டு காலளவுந் தடவினார்கள். அதனாலும் நோய் தணியாமல் முன்னையினும் அதிகரிக்கத் தலைப்பட்டது. அதனைக் கண்ட சமணர்கள், "ஐயோ இதற்கு நாம் யாது செய்வோம். இந்நோய் எம்மாற் போக்கரிது" என்று புகன்று மனங்கலங்கித் தருமசேனரைக் கைவிட்டு அகன்றனர்.

(7) சமணர்கள் சூலை நோயை அகற்ற முடியாது கைவிட்டு அகன்றமையும், நோய் மேன்மேலும் முடுகி வளர்வதையும் கண்ட தருமசேனர்க்குத் தன் தமக்கையாராகிய திலகவதியாரைப் பற்றிய நினைப்பு வந்தது. அவர்பாற் சென்று தனக்கு நேர்ந்த நோயை உணர்த்தும்படி தம்முடைய பாகுகனை அனுப்பினர். அப்பாகுகன் திருவதிகையை அடைந்து அருந் தபோதனியாராகிய திலகவதியாரை, நந்தனவனத்தினின்றும் வெளியே வரும் சமயத்தில் கண்டு வணங்கி, 'யான் உம் இளையவர் ஏவலினால் இங்கு வந்தேன்' எனப் பகர்ந்தனன். அதைக் கேட்ட திலகவதியார், 'அவனுக்கு ஏதேனும் தீங்கு உளதோ' என்று வினவினர். அதற்குப் பாகுகன், 'கொல்லாது சூலைநோய் குடர்முடக்கித் தீராமையால் எல்லாருங் கைவிட்டார், இதுசெயல் என்முன் பிறந்த நல்லாள்பாற் சென்று இயம்பி, நான்உய்யும்படிகேட்டு இங்கு அணைவாய்' என்று செலவிட்டனர், என்று அறைந்தனன். அதுகேட்ட திலகவதியார், 'யான் அங்கு உடன்போந்து உன் அமண் பள்ளியை அணுகிடேன்; நீசென்று இதனை அவனுக்கு உணர்த்துக' என்றனர். பாகுகன் மீண்டுதரும சேனரிடஞ்சென்று திலகவதியார் மொழிந்ததனைத் தெரிவித்தனன்.

(8) தமக்கையார் சொல்லிச் செலவிடுத்ததைச் செவிமடுத்த தருமசேனர், 'இதற்கு யாது செய்வேன்' என அயர்ந்தனர். இறைவன் திரு

